# செந்தமிழ் இலக்கணம்

முதற்படிவம்—சிறப்புப்பகுதி

வித்துவான், V. நரசிம்மன், M. A.,
வித்துவான், C. இராமசாமி
தமிழ் ஆசிரியர்—கழக உயர்நிலைப்பள்ளி, வத்தலகுண்டு.



ஜெனரல் புக் கம்பெனி
கும்பகோணம்

 [விலை 0—6—0




# முன்னுரை

செந்தமிழ் இலக்கணம் என்னும் இந்நூல், முதன் மூன்று படிவச் சிறப்புத் தமிழ் பயிலும் மாணவர்க்கு உரியதாக 1951-ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்டுள்ள புதிய பாடத் திட்டத்தை (syllabus) அடியொற்றி அம்மாணவர்கட்கு நன்கு பயன்படும் வகையில் இயற்றப் பட்டுள்ளது.

உதாரணங்களால் விதியைக் கற்பிப்பதாகிய அநுமான முறை ( inductive method ) இந்நூலில் கையாளப்படுகின்றது. மாணவர் விருப்பத்தோடு இலக்கணங் கற்க இது ஏதுவாகும். இதில் கொடுக்கப் பட்டுள்ள உதாரணங்கள் எளிமையும் விளக்கமும் உடையவை. ஆங்காங்குப் புதிய முறையில் போதிய பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. இறுதியிலுள்ள தேர்வு வினாக்கள் கற்றவற்றைக் கருத்திற்குக் கொணர்ந்து பயில பயன்படும்.

கல்வித் துறை போகியார் இதனை ஆதரிப்பார்களென நம்புகின்றோம்.

ஆக்கியோர்கள்.

# பொருளடக்கம்

## முதற்படிவம் — சிறப்புப்பகுதி

# செந்தமிழ் இலக்கணம்

## முதற் படிவம் — சிறப்புப் பகுதி

## I. எழுத்து

### 1. ஒலி எழுத்து, வரி எழுத்து

***ஒலி எழுத்து:*** ஒலி பல வகைகளில் உண்டாகிறது. உதாரணமாக மணி அடிக்கும்போது ஒலி உண்டாகிறது; ஆடு கத்தும்போது ஒலி உண்டாகிறது; மழை பெய்யும்போது ஒலி உண்டாகிறது. இந்த ஒலிகளுக்கெல்லாம் பொருள் இல்லை. ஆனால் மனிதன் பேசும்போது உண்டாகும் ஒலிக்கோ பொருள் இருக்கிறது. அதாவது ஒரு மனிதன் ஒரு கருத்தை ஒருவகை ஒலியால் வெளியிடுகிறான். அந்த ஒலியை மற்ற மனிதர்கள் கேட்டதும் அவன் கருத்தை அவர்கள் அறிந்து கொள்ளுகிறார்கள். மனிதன் இப்படிச் செய்யும் ஒலியானது சொல் எனப்படுகிறது.

சொற்கள் பெரும்பாலும் பல ஒலிகளால் ஆனவை. உதாரணமாக *மண்* என்று சொல்லும்போது அதில் **ம, ண்** என்று இரண்டு ஒலிகள் ஏற்படுகின்றன; **கடல்** என்று சொல்லும்போது **க, ட, ல்** என்று மூன்று ஒலிகள் ஏற்படுகின்றன. இந்த ஒலி ஒவ்வொன்றும் மனிதன் வாயிலிருந்து எழுகிறது. ஆகையால் **எழுத்து** எனப்படுகிறது.

இவ்விதமாக சொல் உண்டாவதற்குக் காரண மாக உள்ள ஒலியே எழுத்து ஆகும். மனித னுடைய பேச்சில் தோன்றும் எழுத்து 'ஒலி எழுத்து' எனப்படும்.

வரி எழுத்து: மனிதன் தன் கருத்தைக் காகிதம், பலகை முதலியவற்றில் எழுதியும் பிறருக் குத் தெரிவிப்பது உண்டு. இப்படி எழுதும்போது கோடு அல்லது வரி மூலமாக ஒலி எழுத்து குறிக்கப் படுகிறது; அதாவது எழுதப்படுகிறது. இப்படி எழுதப்படுவதும் எழுத்து ஆகும். இது 'வரி எழுத்து' எனப்படும்.

எழுத்து பேசும்போது "ஒலிவடிவம்" பெறுகிறது; எழுதும்போது "வரிவடிவம்" பெறுகிறது.

---

## 2. எழுத்து வகைகள்

### 1. உயிரெழுத்து

அ, ஆ, இ, ஈ: இந்த எழுத்துக்களை உச்சரித் துப் பாருங்கள். இவை வேறோர் எழுத்தின் உதவி இல்லாமல், தாமே உச்சரிக்கக் கூடியவையாக இருக் கின்றன என்று தெரிகிறது அல்லவா? உயிர் எப்படி வேறொன்றின் உதவி இல்லாமல் இயங்க வல்லதாக இருக்கிறதோ, அதேபோல இந்த எழுத்துக்களும் தாமே இயங்க வல்லவைகளாக இருக்கின்றன. ஆத லால் இவைபோன்ற எழுத்துக்கள் உயிர் எழுத்துக் கள் எனப்படும்.

உயிரெழுத்தாவது உயிர்போலத் தானே இயங்க வல்ல எழுத்தாம். அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்னும் 12 எழுத்துக்களும் உயிர் எழுத்துக்கள் ஆகும்.

## 2. மெய்யெழுத்து

க், ங், ச், ஞ்: இந்த எழுத்துக்களை உச்சரித்துப் பாருங்கள். இவை இக், இங், இச், இஞ் என முறையே உச்சரிக்கப்படுகின்றன அல்லவா? அதாவது இவற்றை உச்சரிக்கும்போது இ என்னும் உயிரெழுத்தைச் சேர்த்து உச்சரிக்க வேண்டியிருக்கிறது. உயிரெழுத்தின் உதவி இல்லாமல் இந்த எழுத்துக்களை உச்சரிக்க முடியாது. நமது உடம்பு (மெய்) எப்படி உயிரின் உதவி இல்லாமல் இயங்க முடியாதோ, அப்படியே இவையும் உயிரெழுத்தின் உதவி இல்லாமல் இயங்க முடியாது. இப்படி இவை மெய் (உடம்பு) போல இருப்பதனால் இவை **மெய்யெழுத்துக்கள்** எனப்படும்.

*மெய்போல, உயிரின் உதவியின்றி இயங்க முடியாத எழுத்து மெய்யெழுத்து ஆகும். க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன், என்னும் 18 எழுத்துக்களும் மெய்யெழுத்துக்களாம்.*

## 3. உயிர்மெய் எழுத்து

கு, சி, தா, பை: இந்த எழுத்துக்களைக் கவனித்துப் பாருங்கள். இவற்றுள்,

கு என்பது க் என்னும் மெய்யும் உ என்னும் உயிரும் சேர்ந்து ஆனது; அதாவது க்+உ=கு.
இப்படியே, ச் + இ = சி
த் + ஆ = தா
ப் + ஐ = பை

இப்படி மெய் முன்னும் உயிர் பின்னுமாக ஒன்று கூடி உண்டாகும் எழுத்து உயிர்மெய் எழுத்து எனப் படும்.

*உயிரும் மெய்யும் சேர்ந்து உண்டாகும் எழுத்து உயிர்மெய் எழுத்து ஆகும். உயிர் மெய் எழுத்தில் உயிர் ஒலி பின்னும், மெய் ஒலி முன்னுமாக அமைந்திருக்கும். 12 உயிர்களும் 18 மெய்களும் இவ்வாறு சேர்ந்து மொத்தம் $12 \times 18 = 216$ உயிர்மெய் எழுத்துக்கள் உண் டாகும்.*

குறிப்பு: க, கா, கி, கீ முதலியனவாக உள்ள உயிர்மெய் எழுத்துக்களைத் தமிழ் நெடுங்கணக்கில் கண்டு கொள்க.

## 4. ஆய்த எழுத்து

ஃ இவ்விதமாக மூன்று புள்ளியிட்டு எழுதப்படும் எழுத்து ஆய்த எழுத்து எனப்படும். இதன் உச்சரிப்பு மிகவும் நுணுக்கமானது. இதை உச்ச ரித்துத் தெரிந்துகொள்ளுங்கள். இது சொல்லின் இடையிலே வரும்.

**உதாரணம்:** அஃது, எஃது, அஃறிணை.

சொற்களின் இடையிலேயே வருவதாய், நுணுகிய ஓசையை உடைய "ஃ" என்னும் எழுத்து ஆய்த எழுத்தாம்.

மேற்கூறியவைகளிலிருந்து தமிழ் எழுத்துக்கள், உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர் மெய் எழுத்து, ஆய்த எழுத்து என நான்கு வகைப் படும் என்று அறியலாம்.

| | |
|---|---|
| உயிர் எழுத்துக்கள் | 12 |
| மெய் எழுத்துக்கள் | 18 |
| உயிர்மெய் எழுத்துக்கள் | 216 |
| ஆய்த எழுத்து | 1 |
| ஆக மொத்தம் தமிழ் எழுத்துக்கள் | 247 ஆகும் |

## பயிற்சி

கீழே கொடுக்கப்பட்டுள்ள வாக்கியங்களில் கண்ட சொற்களிலுள்ள எழுத்துக்கள் முறையே இன்ன வகையைச் சார்ந்தவை எனப் பின்கண்டவாறு அட்டவணையிட்டுக் குறித்துக் காட்டுக.

1. ஆலயம் தொழுவது சாலவும் நன்று.
2. ஐயம் புகினும் செய்வன செய்.
3. *திணை உயர்திணை அஃறிணை என இரு வகைப்படும்.*

| உயிர் எழுத்து | மெய் எழுத்து | உயிர்மெய் எழுத்து | ஆய்த எழுத்து |
|---|---|---|---|
| | | | |

# 3. சில எழுத்துக்களின் ஒலி வேறுபாடும் பொருள் வேறுபாடும்

## 1. ர, ற வேறுபாடு

*ற* இந்த இரண்டு எழுத்துக்களும் ஒரே உச்சரிப்பை உடையனபோலக் காணப்படும். ஆனால் உண்மையில் இவை வேறு வேறு உச்சரிப்பை உடையவை. இவற்றின் பிறப்பைக் கொண்டு இவற்றின் உச்சரிப்பை நன்ருக அறிந்து உச்சரிக்க வேண்டும்.




1. *ர* - மேல்வாயை நாவின் நுனி தடவுவதால் இந்த எழுத்துப் பிறக்கும். *மரம், விரல்* என்பன போன்ற சொற்களில் உள்ள இந்த எழுத்தை மேற்கண்டவாறு உச்சரிக்கவும்.




2. *ற* - மேல்வாயை நாவினது நுனி அதிகமாகப் பொருந்துவதனல் இந்த எழுத்துப் பிறக்கும். *சிறகு, பிறப்பு* என்பன போன்ற சொற்களில் உள்ள இந்த எழுத்தை மேற்கண்டவாறு உச்சரிக்கவும்.

பிறப்பிலும் உச்சரிப்பிலும் இந்த எழுத்துக்கள் வேறுபடுவது போலவே, இவை பொருந்தி வரும் சொற்களும் பொருளில் வேறுபடும். உதாரணமாக இங்கே சில சொற்களைக் குறிப்போம்.

ர — ற

1. அரம் - அராவுதற்குரிய கருவி — அறம் - தருமம்
2. அரி - திருமால், நறுக்கு — அறி - தெரிந்துகொள்
3. அரை - சரிபாதி — அறை - வீட்டின் ஒரு பகுதி
4. இரு - உட்கார் — இறு - வடிகட்டு
5. இரை - உணவு — இறை - வரி, தலைமை
6. உரு - வடிவம் — உறு - மிகுந்த, பெறு
7. எரி - நெருப்பு — எறி - வீசு
8. ஏரி - நீர்நிலை — ஏறி - மேலே ஏறி
9. கரி - யானை — கறி - பதார்த்தம்
10. கூரை - வீட்டின் உறுப்பு — கூறை - ஆடை
11. திரை - அலை — திறை - கப்பம்
12. பரி - குதிரை — பறி - மீன்கூடை
13. மரம் - ஒரு தாவரப் பொருள் — மறம் - வீரம்
14. விரல் - ஓர் உறுப்பு — விறல் - வலிமை

## பயிற்சி

*பின்வரும் வாக்கியங்களிலுள்ள பிழைகளைத் திருத்துக:*

1. அரம் என்றால் தருமம் என்பது பொருள்.
2. கறி என்பது யானையின் பெயர்.
3. கண்ணன் கூறை வீட்டில் வசிக்கிறான்.
4. கடலில் திறை எழும்பி எழும்பி விழுகிறது.
5. அவனுடைய பறி வேகமாய் ஓடிற்று.
6. கோழி குப்பையைக் கீறி இறை தின்றது.
7. முருகன் ஏறியின் கரைமேல் ஏரி வந்தான்.
8. மரத்தின்மேல் ஏரித் தேங்காயைப் புரி

## 2. ந, ன, ண

மேற்கண்ட மூன்று எழுத்துக்களில் ந, ன என்னும் இரண்டும் உச்சரிப்பில் ஒன்றுபோலக் காணப்படும். ஆயினும் அவற்றுள் பேதம் உண்டு. ண என்பது முன் இரண்டினும் உச்சரிப்பில் வேறு பட்டது. ஆயினும் சிலர் பிழைபட உச்சரிக்கிறார்கள். இவ்வெழுத்துக்கள் பொருந்தி வரும் சொற்களும் பொருளில் வேறுபடும். இவற்றின் உச்சரிப்பையும் பொருள் வேறுபாட்டையும் பின்னர்க் காண்க.




1. ந - மேல்வாய்ப் பல்லின் அடிப்புறத்தை நாவின் நுனி பொருந்துவதனால் இந்த எழுத்துப் பிறக்கும். இது தகரத்தை அடுத்து வரும் ஆகையால் தந்நகரம் எனப்படும். மேலும் இது சொல்லின் இறுதியில் பெரும்பாலும் வராது; சொல்லுக்கு முதலில் வரும்.




2. ன -மேல் வாயை நாவின் நுனி மிகப் பொருந்துவதனுல் இந்த எழுத்துப் பிறக்கும். இது றகரத்தை அடுத்து வரும் ஆகை யால் றன்னகரம் எனப்படும். இது சொல்லுக்கு முதலில் வராது; சொல்லின் கடைசியில் வரும்.




3. ண-மேல் வாயின் நுனியை நாவின் நுனி பொருந்துவதால் இந்த எழுத்துப் பிறக்கும். இது டகரத்தை அடுத்து வருவதால் டண்ணகரம் எனப்படும். இது வும் சொல்லுக்கு முதலில் வராது; ஈற்றில் வரும்.

## பொருள் வேறுபாடு

| | ந | ன | ண |
|---|---|---|---|
| 1. | நான் | - பேசுகிறவன் | – நாண் - கயிறு |
| 2. | நானம் | - கஸ்தூரி | – நாணம் - வெட்கம் |
| 3. | நனி | - மிகவும் | – நணி - நெருங்கி |

குறிப்பு: மேற்கண்ட சொற்களை ஞந், ஞண், ஞதம், ஞணம், னநி, னணி என்று எழுதுதல் கூடாது.

4. ஆனை - யானை — ஆணை - கட்டளை
5. ஊன் - மாமிசம் — ஊண் - உணவு
6. மனை - வீடு — மணை - ஆசனம்
7. பனி - குளிர்ச்சி — பணி - வணங்கு
8. பனை - ஒரு மரம் — பணை - மூங்கில்
9. தினை - ஒரு தானியம் — திணை - வகுப்பு, குலம்
10. கனம் - பளு — கணம் - கூட்டம்

பின்வரும் வாக்கியங்களிலுள்ள பிழைகளைத் திருத்துக:

1. நாண் அவனோடு பேசினேந்.
2. நானம் உள்ளவந் இப்படிச் செய்ய மாட்டாண்.
3. பணை மரம் மட்டைகளை உடையது.
4. திணை என்பது தானிய வகைகளுள் ஒன்று.
5. ஆணை வரும் பிண்ணே; மணி ஓசை வரும் முண்ணே.
6. கோவிலுக்குச் சென்று கடவுளைப் பனிந் தாந்.

## 3. ல, ழ, ள

இந்த மூன்று எழுத்துக்களும் உச்சரிப்பில் வேறு படுமாயினும், பலர் இவற்றின் உச்சரிப்பைச் சரிவர அறியாமல் பிழைபட உச்சரிக்கிறார்கள். மேலும் இவை பொருந்தி வரும் சொற்களும் பொருளில் வேறுபடும்.

இவற்றின் உச்சரிப்பு வேறுபாடுகளையும், இவை சொற்களில் பொருந்தி வருங்கால் அச்சொற்கள் பொருள் வேறுபட வருவதையும் அடியிற் காண்க.




1. ல - மேல் வாய்ப்பல்லின் அடியை, நாவின் விளிம்பு தடித்துப் பொருந்துவதால் இந்த எழுத்துப் பிறக்கும்.




2. ழ - மேல் வாயை, நாவின் நுனி தடவுவதால் இந்த எழுத்துப் பிறக்கும்.




3. ள - மேல் வாயை, நாவின் விளிம்பு தடித்துத் தடவ இந்த எழுத்துப் பிறக்கும்.

## பொருள் வேறுபாடு

| ல | ழ | ள |
|---|---|---|
| 1. அலை-கடல் அலை- | அழை-கூப்பிடு- | அளை-புற்று |
| 2. கலை-ஆடை - | கழை-மூங்கில் - | களை-நீக்கு |
| 3. தலை-ஓர் உறுப்பு - | தழை-இலை - | தளை-கட்டு |
| 4. விலை-மதிப்பு - | விழை-விரும்பு - | விளை-உண்டாக்கு |
| 5. கிலி-அச்சம் - | கிழி-துண்டு - | கிளி-ஒரு பறவை |
| 6. வலி-நோய் - | வழி-பாதை - | வளி-காற்று |
| 7. உலை-அடுப்பு - | உழை-வேலை செய் - | உளை-சேறு |

*பின் வரும் வாக்கியங்களிலுள்ள பிழைகளைத் திருத்துக:*

1. கரன் வழித்தது என்று முருகன் அழுதான்.
2. உளையில் பானை ஏற்றிச் சோறு சமைத்தான்.
3. தஞ்சைக்குச் செல்லும் வலி நீண்டது.
4. கிலி ஒரு அளகான பறவை.
5. தளை வழிக்கு மருந்து கொடு.
6. வயலில் கலை பிடுங்கினான்.



## II. சொல் ஆக்கம்

வா, போ, கை, பை,—இங்கே காணப்படும் நான்கு எழுத்துக்களும் தனித்தனி ஒரு பொருளைத் தெரிவிக்கின்றன. இது எழுத்து தனித்து வந்து பொருள் உணர்த்தியது.

நிலம்—இது மூன்று எழுத்துக்கள் ஒன்று சேர்ந்து வந்து பொருளை உணர்த்தின.

பருந்து—இங்கு நான்கு எழுத்துக்கள் ஒன்று சேர்ந்து வந்து பொருளை உணர்த்தின.

ஆகையால் நிலம், பருந்து என்பன, பல எழுத்துக்கள் ஒன்று சேர்ந்து வந்து பொருள் உணர்த்தியவை ஆகும். மேற்கண்டவாறு, எழுத்து தனித்தாவது, பல ஒன்று சேர்ந்தாவது பொருள் தந்தால் அது சொல் எனப்படும்.

பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் எனச் சொல் நான்கு வகைப்படும்.

### 1. பகுதி — வினைப்பகுதி

நடந்தேன்—இது 'நான் நடந்தேன்' எனப் பொருள்படும்.

நடந்தாய்—இது 'நீ நடந்தாய்' எனப் பொருள்படும்.

நடந்தான்—இது 'அவன் நடந்தான்' எனப் பொருள்படும். இவற்றுள் முதலில் உள்ள நட என்பதே நடத்தலாகிய தொழிலைக் குறிப்பதை அறிக. இவ்வாறே.

*வந்தான்* என்பதில் *வா* என்பது தொழிலைக் குறிக்கும்.

*போகிறாய்* என்பதில் *போ* என்பது தொழிலைக் குறிக்கும்.

*வினைச் சொற்களில்* முதலில் மேற்கண்டவாறு தொழிலை உணர்த்தி நிற்பது *வினைப்பகுதி* எனப் படும். *பகுதி* என்பது முதலில் நிற்பது. ஆதலால் முதனிலை என்றும் சொல்லப்படும். சில வினைச் சொற்களிலுள்ள பகுதிகளை அடியிற் காண்க:

| (உ-ம்) | *வினைச்சொல்* | | *பகுதி* |
|---|---|---|---|
| (1) | பார்க்கிறான் | — | பார் |
| (2) | உண்பாய் | — | உண் |
| (3) | இருக்கின்றேன் | — | இரு |
| (4) | தடுத்தான் | — | தடு |
| (5) | எடுக்கிறாய் | — | எடு |
| (6) | கொடுப்பான் | — | கொடு |

இந்த வினைச்சொற்களில் பகுதி, உருவம் மாறு படாமல் இருக்கின்றன. சில வினைச்சொற்களில் பகுதி உருவம் மாறி வரும்.

| (உ-ம்) | *வினைச்சொல்* | | *பகுதி* |
|---|---|---|---|
| (1) | வருகிறேன் | — | வா |
| (2) | தருவான் | — | தா |
| (3) | கண்டாள் | — | காண் |
| (4) | விட்டான் | — | விடு |
| (5) | தொட்டான் | — | தொடு |

பின்கண்ட வினைச் சொற்களில் உள்ள பகுதி களைத் தனியே எடுத்து எழுது:

காண்பான், உட்கார்ந்தான், நின்றேன், கற்றாய், பெற்றீர், நட்டான், பாடினாள், தேடினாள், பேசினாய், புகழ்ந்தான்.

## 2. பெயர்ப்பகுதி

வினைச் சொற்களில் பகுதிகள் இருப்பது போலவே பெயர்ச் சொற்களிலும் பகுதிகள் இருப்பது உண்டு. கீழே சில பெயர்ச் சொற்களில் உள்ள பகுதிகளை எடுத்துக் காட்டியிருப்பது காண்க.

| | பெயர்ச்சொல் | | பகுதி |
|---|---|---|---|
| (1) | கூனன் | — | கூன் |
| (2) | அரசன் | — | அரசு |
| (3) | வலைஞன் | — | வலை |
| (4) | அறிஞன் | — | அறிவு |
| (5) | மனைவி | — | மனை |
| (6) | வில்லி | — | வில் |
| (7) | இல்லான் | — | இல் |
| (8) | உழவன் | — | உழவு |
| (9) | நண்பன் | — | நள் |
| (10) | வம்பன் | — | வம்பு |

பின்கண்ட பெயர்ச் சொற்களிலுள்ள பகுதிகளைத் தனியே எடுத்து எழுதுக:

அரசி, கொலைஞன், மனைவி, திருடன், பகைவன், பல்லன், தோளன், புலவன், அயலார், கறுப்பன்.

# III. தொடர் ஆக்கம்

பொருள் பொருந்தி வருமாறு சொற்கள் தொடர்ந்து வருவது சொற்றொடர் எனப்படும்.

(உ-ம்) முருகன் கடைக்குச் சென்றான்.

மேலே கண்ட சொற்றொடரில் பொருள் முடிவு பெற்று இருக்கிறது. இவ்விதச் சொற்றொடர் முற்றுச் சொற்றொடர் அல்லது வாக்கியம் எனப்படும்.

சில சொற்றொடர்களில் பொருள் முற்றுப்பெற்று இரா. அவ்விதச் சொற்றொடர் எச்சச் சொற்றொடர் எனப்படும்.

(உ-ம்) இங்கு வந்த சிறுவன்
முருகன் பாடம் படித்துக்கொண்டு

*குறிப்பு*: பொருள் பொருந்தி வராமல் சொற்கள் பல தொடர்ந்து வந்தால் அவை சொற்றொடர் ஆகா.

(உ-ம்) கந்தன் பசு நடந்தேன் நில்.

## 1. தமிழ் மொழியில் பிறமொழிச் சொற்கள் கலந்து வருதல்

நீண்ட காலமாகத் தமிழ் நாட்டாருடன் அந்நிய நாட்டார் பலர் வந்து பேசிப் பழகி உறவாடுகிறார்கள். அவர்களில் பலர் தமிழ் நாட்டில் நிலையாகத் தங்கி வாழ்ந்தும் வருகிறார்கள். அதனால் தமிழ் மொழியில்

வேற்று நாட்டாருடைய சொற்கள் வந்து கலந்துள்ளன. அவற்றை அறிந்துகொள்ளுதல் நல்லது. உதாரணமாக,

தம்பி, எது இந்தப்பக்கம் **விஜயம்** செய்தது? **அபூர்வமாய்** இருக்கிறதே! **கருடசேவைக்கு** வந்தாயோ?

இல்லை **ஸார்!** இங்கே ஒரு **ஆசாமி** பணம் தரவேண்டும்: **வசூல்** பண்ணுவதற்காக வந்தேன்,

ஐயா, **சலாம்!** கொஞ்சம் பேசலாமா?

**ஓ! பேஷாய்!** வாருங்கள் எல்லோரும் போய்க் **காப்பி** சாப்பிட்டுவிட்டு வருவோம்.

இந்த உரையாடலைக் கவனித்தால் இதில் பல மொழிச் சொற்கள் கலந்திருப்பது தெரியவரும். அவை தடித்த எழுத்துக்களில் உள்ளன; பாருங்கள். இச்சொற்களில்,

**விஜயம், கருடசேவை, அபூர்வம்** என்பவை **வடமொழி** அல்லது ஸமஸ்கிருதச் சொற்கள்.

**ஸார், காப்பி** என்பவை ஆங்கிலச் சொற்கள்.

**சலாம், பேஷ்** இவை இந்துஸ்தானிச் சொற்கள்.

**ஆசாமி வசூல்** இவை அரபிச் சொற்கள்.

தமிழில் ஜ, ஷ, ஸ, ஹ, க்ஷ என்னும் ஒலிகளைக் கொண்ட சொற்கள் கிடையா. அதனால் இவ்வொலி களைக் கொண்ட சொற்கள் வரின், அவை வேறு மொழிச்சொற்கள் என அறிந்துகொள்ளலாம். மற்றும்

தமிழில் வந்து வழங்கும் பிறமொழிச் சொற்கள் எல்லாவற்றையும் இங்கு எடுத்துக்கூற முடியாது. சிலவற்றை இங்கே கூறுவோம்.

*பீச்சு, ஷாப்பு, கேட்டு, ரோடு — ஆங்கிலச் சொற்கள்.*

*கிராம்பு, அலமாரி, ஜன்னல், சாவி — போர்ச்சுக்கீசியச் சொற்கள்.*

*சுமார், ஜமீன், சிப்பாய், ரஸ்தா — பாரசீகச் சொற்கள்.*

*மாமூல், ஆசாமி, இலாகா, அனுமத்து — அராபியச் சொற்கள்.*

*அல்வா, ஆஜர், ருஜு, லட்டு — இந்துஸ் தானிச் சொற்கள்.*

## பயிற்சி

1. உங்களுக்குத் தெரிந்த பிறமொழிச் சொற்கள் சில வற்றைக் கூறுங்கள்:
2. பின்வரும் வாக்கியங்களிலுள்ள வேற்று மொழிச் சொற்களைத் தனியே எடுத்து எழுதுக.
   - (1) மாமூல் பிரகாரம் அவன் வந்து விசாரித்தான்.
   - (2) அலமாரியைத் திறந்து நோட்டு, புஸ்தகம் இவற்றை எடுத்து வா.
   - (3) பீச்சுக்குப்போய் ஜோராய் உலாவி வருவோமா?
   - (4) அந்தக் கேஸில் குற்றவாளி செய்த குற்றம் ருஜு ஆகவில்லை.
   - (5) ஹோட்டலுக்குப்போய் லட்டு, ஜிலேபி; ஹல்வா இவற்றை வாங்கிவா.

## 2. வழூஉச்சொல்லும் திருத்தமும்

பேச்சு வழக்கில் மக்கள் சொற்களைப் பலவாறு உருத் தெரியாமல் திரித்துச் சொல்கிறார்கள். அவையெல்லாம் வழூஉச் சொற்களாம். வழூஉச் சொற்கள் என்றால் குற்றமுடைய சொற்கள் என்பது பொருள். நாம் பேசும்போது அப்படிப்பட்ட சொற்களைப் பேசாமல் திருத்தமாகப் பேசுவதே நல்லது. உதாரணமாக.

"மருதைக்கிப் போயி குருதை வாங்கிட்டு வந்தான்.

என்ன ஐயா, உங்கள் மகன் வாழைப்பழத்தை வாயப்பயம் என்று சொல்லுகிறான்.

அது அப்படித்தான் வயக்கங்க"

இந்தப் பேச்சைப் பாருங்கள்: இவற்றைத் திருத்தமாகச் சொல்ல வேண்டியது அவசியம் அல்லவா? இந்தக் கொச்சைப் பேச்சு தமிழ் நாட்டில் இடத்துக்கிடம் வேறுவேறாக இருக்கிறது. இவற்றை எடுத்துக்காட்டுதல் இயலாது.

### பயிற்சி

**பின்கண்ட வாக்கியங்களிலுள்ள வழுக்களைத் திருத்திச் சரியான முறையில் எழுதுக.**

1. கொளந்தைக்கி இண்ணைக்கி ஒடம்பு நல்லா இல்லே.
2. மொவம் கயுவிக்கினு பல்லத் தேச்சுக்கினு வந்து சேரு
3. சுவத்துமேல் கோடு கீச்சாதே.
4. ரொம்ப ரொம்ப ஜாமான் வாங்கிரிக்கியே! இன்னான்னு வாங்கினே?.
5. நாலுநாளா ஒசனை பண்றேன்; இன்னும் ஞாவகத்துக்கு வரலே.

# IV. சொல்

## 1. பெயர்ச்சொல்

### பொருட்பெயர் முதலிய ஆறுவகைப் பெயர்கள்

1. *வேலன், கமலம், குதிரை, கிளி, பலா* — இப்பெயர்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருளுக்குப் பெயராய் இருக்கின்றன அல்லவா? இவ்வாறு, பொருளுக்குப் பெயராய் வருவது **பொருட்பெயர்** எனப்படும்.

2. *ஊர், தோட்டம், வீடு, அறை, கடை* — இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு இடத்தின் பெயராம். இவ்வாறு இடத்திற்குப் பெயராய் வருவது **இடப் பெயர்** எனப்படும்.

3. *பிரபவ, வைகாசி, திங்கள், பரணி, பகல், மணி*—இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு காலத்தின் பெயராகும். இவ்வாறு, காலத்திற்குப் பெயராய் வருவது **காலப்பெயர்** எனப்படும்.

4. *வேர், காய், பூ, தலை, கை, கால், தூண்* — இவை ஒவ்வொன்றும் ஒரு பொருளின் பகுதியாகிய உறுப்பு அல்லது சினைக்குப் பெயராம், இவ்வாறு, சினைக்குப் பெயராய் வருவது **சினைப்பெயர்** எனப்படும்.

5. *நன்மை, தீமை, பெருமை, சிறுமை, கருமை, செம்மை* — இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு குணத்திற்குப் பெயராம். இவ்வாறு, குணத்திற்குப் பெயராய் வருவது **குணப்பெயர்** அல்லது **பண்புப் பெயர்** எனப்படும்.

6. வருதல், ஈகை, செலவு, பழக்கம், மறதி, கொடை — இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு தொழிலுக்குப் பெயராம். இவ்வாறு தொழிலுக்குப் பெயராய் வருவது *தொழிற்பெயர்* எனப்படும்.

மேற்கண்டவாறு பெயர்ச் சொற்கள் *பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர், குணப்பெயர், தொழிற்பெயர்* என ஆறு வகைப் படும்.

## பயிற்சி

1. பொருட்பெயர் முதலிய ஆறு வகைப் பெயர்ச்சொற் களுக்கும் இங்கே கூறப்படாத உதாரணங்கள் சில கூறுக.
2. பின்கண்ட வாக்கியங்களில் உள்ள பெயர்ச்சொற்கள் இன்னவகையைச் சார்ந்தவை எனப் பின்கண்டவாறு அட்டவணையிட்டுக் காட்டுக.

(1) வேலனும் கந்தனும் பள்ளிக்குச் சென்றார்கள்.
(2) மாலையில் விளையாடுதல் உடலுக்கு நன்மை தரும்
(3) குளத்தில் நிறைய மீன்கள் உள்ளன.
(4) இந்த ஆண்டு விஜய ஆண்டு எனப்படும்.
(5) குதிரையின் கழுத்தில் மயிர் அடர்ந்து இருக்கும்.

| வாக்கியத்தின் எண் | பெயர்ச்சொற்கள் | இன்னவகைப் பெயர்ச் சொல் என்பது |
|---|---|---|
| | | |

## 2. வினைச்சொல்

*வா* — இது ஒரு வினைப்பகுதி. இதிலிருந்து *வந்தேன், வந்தாய், வந்தான், வருகிறேன், வருகிறாய், வருகிறான், வருவேன், வருவாய், வருவான், வந்த, வருகிற, வரும், வந்து, வர, வரின்* எனப் பல வினைச்சொற்களை உண்டாக்கலாம்.

இவற்றுள், வந்தேன், வந்தாய், வந்தான், வருகிறேன், வருகிறாய், வருகிறான், வருவேன், வருவாய், வருவான் என்பன பொருள் முற்றுப்பெற நிற்கும் வினைச்சொற்கள் ஆகும். ஆதலால் இவை ***முற்று வினைகள்*** என்று சொல்லப்படும். முற்றுவினைகளை ***வினைமுற்றுக்கள்*** என்று சொல்லலாம்.

*வந்த, வருகிற, வரும், வந்து, வா, வந்தால்* என்பவை பொருள் முடிவு பெறாத வினைச்சொற்கள். ஆகும். பொருள் முடிவு பெறாத வினைச்சொற்கள் ***எச்சவினைகள்*** என்று சொல்லப்படும். இதனால் வினைச்சொற்கள் ***முற்று வினைகள், எச்ச் வினைகள்*** என இருவகைப்படும் என அறியலாம்.

### வினைமுற்று வகைகள்

1. *வந்தான், தந்தார், போனார்கள்* — இவ்வினைச்சொற்களில் செயல் முன்னமே நடந்து விட்டதைக் காண்க. இவ்வாறு, செயல் முன்னமே நடந்து விட்டதைத் தெரிவிப்பது ***இறந்தகாலம்*** ஆகும். இறந்த காலத்தில் வரும் வினைமுற்றுக்கள் ***இறந்தகால வினைமுற்றுக்களாம்.***

2. வருகிறான், தருகிறார்கள், போகின்றன- இவ்வினைச் சொற்களில் செயல் அப்போது நடை பெறுகிறது. தொழில் நடைபெற்றுக் கொண்டு இருப்பதைத் தெரிவிக்கும் காலம் நிகழ்காலம் ஆகும். நிகழ்காலத்தில் வரும் வினைமுற்றுக்கள் நிகழ்கால வினைமுற்றுக்களாம்.

3. வருவான், தருவேன், போவோம்—இவ் வினைமுற்றுக்களில் செயல் பின்னர் நடைபெறப் போகின்றது. இவ்வாறு, தொழில் பின்னர் நடைப் பெறப்போவதைத் தெரிவிப்பது எதிர்காலம் ஆகும். எதிர்காலத்தில் வரும் வினைமுற்றுக்கள் எதிர்கால வினைமுற்றுக்களாம்.

காலம்—இறந்தகாலம், நிகழ்காலம், எதிர் காலம் என மூவகைப்படும். காலத்தை ஒட்டி வினை முற்றுக்களும்—இறந்தகால வினைமுற்றுக்கள், நிகழ்கால வினைமுற்றுக்கள், எதிர்கால வினை முற்றுக்கள் என மூவகைப்படும்.

## பயிற்சி

பின்வரும் வாக்கியங்களிலுள்ள வினைமுற்றுக்களை எடுத் தெழுதி அவை இன்ன கால வினைமுற்றுக்கள் என்றும் குறிக்க:

1. கம்பர் இராமாயணம் பாடினார்.
2. வயலில் உழவர் உழுகின்றனர்.
3. நாளைக்கு மழை வரும்.
4. அந்தக் குதிரை மிகவும் வேகமாய் ஓடிற்று.
5. அவன் அடி பொறுக்கமாட்டாமல் அழுதான்.
6. சென்னைக்குச் சென்றவர் நாளைக்கு வருவார்.

## 3. எண்ணுப் பெயர்கள்

தமிழில் எண்களைக் குறிக்கும் சொற்கள் எண்ணுப் பெயர்கள் எனப்படும். அவை பின் வருமாறு.

| | | |
|---|---|---|
| ஒன்று | பதினொன்று | முப்பது |
| இரண்டு | பன்னிரண்டு | நாற்பது |
| மூன்று | பதின்மூன்று | ஐம்பது |
| நான்கு | பதினான்கு | அறுபது |
| ஐந்து | பதினைந்து | எழுபது |
| ஆறு | பதினாறு | எண்பது |
| ஏழு | பதினேழு | தொண்ணூறு |
| எட்டு | பதினெட்டு | நூறு |
| ஒன்பது | பத்தொன்பது | ஆயிரம் |
| பத்து | இருபது | பதினாயிரம் |

நூறாயிரம் அல்லது இலக்கம்.
பத்து நூறாயிரம் அல்லது பத்திலக்கம்.
நூறு நூறாயிரம் அல்லது கோடி.

எண்கள் பொருள்களோடு பொருந்தி வரும் போது அவற்றைக் குறிக்கும் பெயர்கள் பின்கண்ட வாறு பலவகையாக வரும்.

(1)

| | |
|---|---|
| ஒரு பொருள் | எண் பொருள் |
| இரு பொருள் | ஒன்பான் பொருள் |
| முப் பொருள் | பதின் பொருள் |
| நாற் பொருள் | நூற்றுப் பொருள் |

| | |
|---|---|
| ஐம் பொருள் | ஆயிரப் பொருள் |
| அறு பொருள் | இலக்கப் பொருள் |
| எழு பொருள் | கோடிப் பொருள் |

(2)

| | | |
|---|---|---|
| ஒருவர் | பதினொருவர் | முப்பதின்மர் |
| இருவர் | பன்னிருவர் | நாற்பதின்மர் |
| மூவர் | பதின்மூவர் | ஐம்பதின்மர் |
| நால்வர் | பதினால்வர் | அறுபதின்மர் |
| ஐவர் | பதினைவர் | எழுபதின்மர் |
| அறுவர் | பதினறுவர் | எண்பதின்மர் |
| எழுவர் | பதினெழுவர் | தொண்ணூற்றுவர் |
| எண்மர் | பதினெண்மர் | நூற்றுவர் |
| ஒன்பதின்மர் | பத்தொன்பதின்மர் | ஆயிரவர் |
| பதின்மர் | இருபதின்மர் | பதினாயிரவர் |
| இலக்கம்பேர் | கோடிப்பேர் | |

(3)

| | | |
|---|---|---|
| ஒன்றாவது | ஆறாவது | இருபதாவது |
| இரண்டாவது | ஏழாவது | நூறாவது |
| மூன்றாவது | எட்டாவது | ஆயிரத்தது |
| நான்காவது | ஒன்பதாவது | இலக்கத்தது |
| ஐந்தாவது | பத்தாவது | கோடியது |

## பயிற்சி

பின்கண்டவைகளை வாக்கியங்களில் அமைக்க:

1. ஐந்து எட்டு ஒன்பது, தொண்ணூறு ஆயிரம்.
2. அறு பொருள், எண் பொருள், ஆயிரப் பொருள், கோடிப்பொருள்.
3. நால்வர், எண்மர், ஒன்பதின்மர், பன்னிருவர், ஆயிரவர்
4. ஏழாவது, பத்தாவது, ஆயிரத்தது, கோடியது.

## 4. அடைமொழிகள்

பின்வருவனவற்றைக் கவனி:

(1) நல்ல பையன்
(2) நீண்ட பலகை
(3) சிவப்பு மை.

மேற்கண்ட சொற்றொடர்களில்:

1. நல்ல என்பது பையனுடைய தன்மையை அறிவித்து, பையன் என்னும் பெயர்ச்சொல்லை அடுத்து நிற்கிறது.

2. நீண்ட என்பது பலகையின் தன்மையை அறிவித்து, பலகை என்னும் பெயர்ச்சொல்லை அடுத்து நிற்கிறது.

3. சிவப்பு என்பது மையினுடைய தன்மையை அறிவித்து, மை என்னும் பெயர்ச்சொல்லை அடுத்து நிற்கிறது.

இவ்வாறு பெயர்களின் தன்மையை அறிவிப்பனவாய்ப் பெயர்களை அடுத்து வரும் சொற்கள் பெயர் அடைமொழிகள் எனப்படும்.

பின்கண்டவற்றைக் கவனி:

(1) வேகமாக நடந்தான்
(2) நன்றாகப் படித்தான்
(3) விளக்கமாகக் கூறினான்

மேற்கண்ட சொற்றொடர்களில் :

1. வேகமாக என்பது, எங்ஙனம் நடந்தான் என, அந்த வினையினுடைய தன்மையை அறிவித்து, நடந்தான் என்னும் வினைச்சொல்லை அடுத்து நிற்கிறது.

2. நன்றாக என்பது, எங்ஙனம் படித்தான் என, அவ்வினையினுடைய தன்மையை அறிவித்து, படித்தான் என்னும் வினைச்சொல்லை அடுத்து நிற்கிறது.

3. விளக்கமாக என்பது எங்ஙனம் கூறினான் என, அவ்வினையினுடைய தன்மையை அறிவித்து, கூறினான் என்னும் வினைச்சொல்லை அடுத்து நிற்கிறது.

இவ்வாறு, வினைகளின் தன்மையை அறிவிப்பதாய், வினைகளை அடுத்துவரும் சொற்கள் வினை அடைமொழிகள் எனப்படும்.

ஆகவே அடைமொழிகளாவன, பெயர்வினைகளின் தன்மைகளை அறிவிப்பனவாய் அவற்றையடுத்து வரும் மொழிகள் ஆகும். அவை பெயர் அடைமொழிகள், வினை அடைமொழிகள் என இருவகைப்படும்.

## பயிற்சி

பின்கண்ட வாக்கியங்களிலுள்ள பெயர்வினை அடைமொழிகளை முறையே எடுத்தெழுதுக.

1. அந்த அழகான குதிரை விரைவாக ஓடிற்று.

2. அந்தப் பெரிய குளத்தில் மலர்ந்த தாமரைப் பூக்கள் உள்ளன.

3. அந்த உயரமான கோபுரத்தின்மீது பெரிய கழுகு அமைதியாக உட்கார்ந்திருக்கிறது.

4. கமலம் நேர்த்தியான புடவை வாங்கினாள்.

5. அந்தச் சிறிய வீட்டின் கூரை அழிந்து கிடந்தது.

## 5. சொற்கள் இடத்திற்கேற்பப் பொருள் மாறுபட்டு வருதல்

பின்கண்ட வாக்கியங்களைக் கவனி:

1. நாம் இந்தப் பெரிய உலகத்தில் வசிக்கிறோம்.
2. அவன் நடத்தையைக் கண்டு உலகம் சிரித்தது.

இவற்றுள் முதல் வாக்கியத்தில் உலகம் என்பது இடத்தைக் குறிக்கிறது. இரண்டாவது வாக்கியத்தில் உலகம் என்பது உலகத்திலுள்ள மக்களைக் குறிக்கிறது.

இவ்வாறே கீழ்க்கண்ட சில உதாரணங்களிலும் சொற்கள் பொருள் மாறுபட்டு வருவதைக் காண்க:

(1) சிவபெருமான் கொன்றைவேந்தன் ஆவார்.

மாணிக்கம் கொன்றைவேந்தன் படித்தான்.

(2) அவன் முடியில் மயிர் இல்லை.
அரசன் முடி தரித்தான்.

(3) வேலன் சிவப்பு உடுத்தான்.
அந்த வயலில் சிவப்பு உழுதது.

(4) அவன் அழகிய கண்ணன்.
கண்ணன் பள்ளிக்குச் சென்றான்.

(5) விளக்கு நன்றாக எரிகிறது.
விளக்குக் கீழே விழுந்து உடைந்து விட்டது.

இவற்றால் சொற்கள் இடத்திற்குத் தக்கவாறு பொருள் வேறுபட்டு வருவதை அறிக.

பயிற்சி

மேற்கண்ட உதாரணங்களைப்போல நீங்கள் சில உதாரணங்களைக் கூறுங்கள்.

## 6. ஒரு பொருட் பலசொற்கள்—நுட்பமான பொருள் வேறுபாடுகள்

1. தந்தை மகனைக் கடைக்குப் போகச் சொன்னார். இங்குச் சொன்னார் என்பது சாதாரணமாகச் சொன்னார் என்று பொருள்படும்.

2. ஆசிரியர் மாணவர்க்குப் பொருள் உரைத்தார். இங்குச் சொல்லுதலாகிய பொருளையே கொண்ட உரைத்தார் என்னும் சொல் விளக்கிக் கூறினார் எனப்பொருள்படும்.

3. அவன் தம்பியைப் பார்த்து என் செய்தாய் என்று கழறினான். இங்குச் சொல்லுதலாகிய

பொருளையே உடைய கூறினான் என்பது கோபித்துக் கூறினான் எனப்பொருள்படும்.

மிருகம், பறவை முதலியவற்றின் ஒலிக் குறிப்பிற்கு வேறு வேறு சொற்கள் வழங்குகின்றன. அவையெல்லாம் சத்தம் செய்வதையே குறித்தல் காண்க.

(உ-ம்) நாய் குரைக்கிறது.
யானை பிளிறுகிறது.
கோழி கூவுகிறது.
காக்கை கரைகிறது.

உண்மை, வாய்மை, மெய்ம்மை என்னும் சொற்கள் மூன்றும் பொய் பேசாமையைக் குறிப்பன. ஆயினும் அவற்றில் நுட்பமான பொருள் வேறுபாடு உண்டு. அதாவது :

(1) உண்மை என்பது உள்ளத்தின் பொய்யாமையைக் குறிப்பது; (2) வாய்மை என்பது வாயின் அதாவது பேச்சின் பொய்யாமையைக் குறிப்பது; (3) மெய்ம்மை என்பது மெய்யின் அதாவது உடலின் பொய்யாமையைக் குறிப்பது.

## பயிற்சி

1. மேற்கண்டவாறு பொருள் வேறுபடும் சொற்கள் சில கூறுக.

2. பின்கண்ட சொற்களை வாக்கியங்களில் அமைக்க :
உரைத்தான், கழறினேன், சீறுகிறது, உறுமுகிறது, கத்துகிறது, மெய்ம்மை, வாய்மை, உண்மை.

# V. புணர்ச்சி

பின் கண்டவைகளைக் கவனி;—

(1) அவன் + ஓடினான் = அவனோடினான்

(2) பலா + பழம் = பலாப்பழம்

இங்கு முதல் உதாரணத்தில் *அவன்* என்னும் சொல்லோடு *ஓடினான்* என்னும் சொல் சேர்ந்து *அவனோடினான்* என்று ஆகியிருக்கிறது. இதில் முதலில் உள்ள *அவன்* என்னும் சொல் *நிலைமொழி* எனப்படும். பின்னர் அதனோடு சேரவந்த சொல்லாகிய *ஓடினான்* என்பது *வருமொழி* எனப்படும். *அவனோடினான்* என்பது நிலைமொழியும், வருமொழியும் புணர்ந்த சொற்றொடர். இதனால் இரண்டாம் வாக்கியத்தில் *பலா* என்பதை *நிலைமொழி* எனவும் *பழம்* என்பதை *வருமொழி* எனவும் கூறுகிறோம் அல்லவா? நிலைமொழியும், வருமொழியும் சேர்ந்து பொருந்துவது புணர்ச்சி எனப்படும்.

## 1. இயல்பு புணர்ச்சி — விகாரப் புணர்ச்சி

பின் கண்டவைகளைக் கவனி:—

(1) பலா + மரம் = பலாமரம்.

(2) பலா + பழம் = பலாப்பழம்.

இங்கு முதல் உதாரணத்தில் *பலா* என்னும் நிலை மொழியும், *மரம்* என்னும் வருமொழியும் சேர்ந்த

போது யாதொரு மாறுபாடும் ஏற்படாமல் ஒன்று சேர்ந்துள்ளன. இவ்வாறு புணருவது *இயல்பு புணர்ச்சி* எனப்படும்.

இரண்டாவது உதாரணத்தில் *பலா* என்னும் நிலைமொழியும் *பழம்* என்னும் வருமொழியும் சேர்ந்த போது இடையில் *ப்* என்னும் ஒரெழுத்துத் தோன்றியிருப்பதைக் காண்க. இவ்வாறு இடையில் மாறுபாடு தோன்றப் புணர்வது *விகாரப் புணர்ச்சி* எனப்படும். இங்கு விகாரப் புணர்ச்சியில் புதிதாக எழுத்துத் தோன்றியுள்ளது. இது *மிகுதல்* ஆகும்.

பின்கண்ட உதாரணங்களைக் கவனி:—

(1) மண் + குடம் = மட்குடம்.

(2) மரம் + வேர் = மரவேர்.

இங்கு முதல் உதாரணத்தில் நிலைமொழியீற்றில் உள்ள ணகரம் டகரமாகத் *திரிந்து* புணர்ந்தது. இதுவும் *விகாரப் புணர்ச்சி* ஆகும். இங்கு எழுத்துத் திரிந்து வந்தது *திரிதல்* எனப்படும்.

இங்குள்ள இரண்டாம் உதாரணத்தில் நிலைமொழி ஈற்றில் உள்ள *ம்* என்னும் எழுத்துப் போய்விட்டது. இதுவும் விகாரப் புணர்ச்சியே. இங்கு எழுத்துக் காணமல் போனது *கெடுதல்* எனப்படும். தெரிந்துகொள்:

புணர்ச்சி இயல்பு புணர்ச்சி, விகாரப் புணர்ச்சி என இருவகைப்படும். விகாரப் புணர்ச்சியில் *தோன்றல், திரிதல், கெடுதல்* என்னும் மூவகை விகாரங்கள் ஏற்படும்.

## 2. தனிக் குறிலைச்சாராத மெய்யின்முன் உயிர் புணர்தல்

(1) நூல் + ஏணி = நூலேணி.
(2) மகன் + அல்லன் = மகனல்லன்

இங்குள்ள நிலைமொழிகளின் ஈற்றில் மெய் யெழுத்து உள்ளது. இந்த மெய்யின்முன் வருமொழி முதலில் உள்ள உயிரெழுத்து சேர வந்துள்ளது. நிலைமொழி மெய்க்கு முன் தனிக்குறில் இல்லை. அதாவது முதல் உதாரணத்தில் நூ என்னும் தனி நெடில் உள்ளது; இரண்டாவது உதாரணத்தில் ம, க என்னும் இரண்டு குறில்கள் உள்ளன. இவ்வாறு தனிக் குறிலைச் சாராத மெய்யின்முன் உயிர் வந்தால் இயல்பாகப் புணரும். இங்கு நூலேணி, மகனல்லன் என்று இயல்பாகப் புணர்ந்திருத்தல் காண்க. இங்கு ல்+ஏ=லே என்று வந்ததும், ன்+அ=ன என்று வந்ததும் மெய்யும் உயிரும் கூடி உயிர்மெய் யெழுத்து ஆயினஆம். இவ்வாறு உயிர்மெய்யெழுத்து ஆவது இயல்பு புணர்ச்சியாகவே கொள்ளப்படும்.

## 3. தனிக் குறிலைச் சார்ந்த மெய்யின்முன் உயிர் புணர்தல்

(1) பல் + அழகு = பல்லழகு.
(2) கல் + எறிந்தான் = கல்லெறிந்தான்.

இங்கு நிலைமொழி ஈற்றில் மெய் உள்ளது. அது தனிக்குறிலைச் சார்ந்து உள்ளது. தனிக்குறிலைச் சார்ந்த மெய்யின்முன் உயிர் வந்தால், அந்த மெய்

இரட்டிக்கும்; அதாவது இரண்டாகும். இங்குப் பல்லழகு, கல்லெறிந்தான் என்பனவற்றுள் லகரம் இரட்டித்தது காண்க.

## 4. வல்லெழுத்து மிகும் இடங்கள்

(1) அ + கடை = அக்கடை
இ + செடி = இச்செடி
எ + படை = எப்படை

இங்குச் சுட்டுச் சொற்களின்முன் வல்லினம் மிகுந்தது.

(2) கண்ணனை + கண்டேன் = கண்ணனைக் கண்டேன்
என்னை + பார் = என்னைப்பார்.
பசுவை + துரத்து = பசுவைத் துரத்து

இங்கு இரண்டாம் வேற்றுமை ஐ உருபின்முன் வல்லினம் மிகுந்தது.

(3) வேலனுக்கு + தா = வேலனுக்குத்தா
வீட்டிற்கு + சென்றான் = வீட்டிற்குச் சென்றான்
கடைக்கு + போனான் = கடைக்குப் போனான்

இங்கு நான்காம் வேற்றுமைக்குரிய கு உருபிற்கு முன் வல்லினம் மிகுந்தது.

## பயிற்சி

பின்கண்ட நிலைமொழி வருமொழிகளைச் சேர்த்து அவை எவ்வாறு புணர்ந்துள்ளன என விளக்குக.

1. பலா + மரம்
2. பலா + பழம்
3. வால் + அறுந்தது
4. கண் + எங்கே
5. எ + படம்
6. அ + தட்டு
7. என்னை + பார்த்தான்
8. பாம்பை + கொன்றான்
9. காட்டிற்கு + சென்றான்
10. விலைக்கு + பெற்றான்

# VI. நிறுத்தற் குறிகள்

நாம் புத்தகத்தை வாசிக்கும்போது அதிலுள்ள வாக்கியங்கள் நீண்டவையாக இருந்தால் ஆங்காங்கு நிறுத்திப் படிப்பதற்குரிய இடங்களைக் கவனித்து நிறுத்திப் படிக்கவேண்டும். இல்லாவிட்டால் பொருள் விளங்காது. இப்படி எந்தெந்த இடங்களில் எவ்வளவு நிறுத்திப் படிக்கவேண்டும் என்பதைக் குறிக்கச் சில குறிகள் உள்ளன. அவை **நிறுத்தற் குறிகள்** எனப்படும்.

நிறுத்தும் அளவை மாத்திரைக் கணக்கில் கூறுவது வழக்கம். இயல்பாக ஒரு முறை கண் இமைத்தல் அல்லது கைந்நொடித்தல் ஒரு **மாத்திரை** ஆகும்.

, இது காற்புள்ளி; இது காமா என்றும் சொல்லப்படும். ஒரு மாத்திரை நேரம் நிறுத்தற்குரிய இடங்களில் இது இடப்படும்.

(உ-ம்) 1. இராமா, வா.

2. வேலன் கடைக்குப் போய், சில பழங்களை வாங்கி வந்தான்.

; இது அரைப்புள்ளி: இது செமிக்கோலன் என்றும் சொல்லப்படும். இரண்டு மாத்திரை நேரம் நிறுத்தற்குரிய இடங்களில் இது இடப்படும்.

(உ-ம்) 1. இராமன் தஞ்சைக்குச் சென்றான்; ஆனால் சென்ற காரியம் பலிக்கவில்லை.

2. குதிரை மிகவும் விலை பெற்றதே; ஆயினும் பந்தயத்தில் வெல்லவில்லை.

: இது முக்காற்புள்ளி; இது கோலன் என்றும் கூறப்படும். மூன்று மாத்திரை நேரம் நிறுத்தற்குரிய இடங்களில் இது குறிக்கப்படும்.

(உ-ம்) 1. இங்குள்ள கூடையில் இருக்கும் பழ வகைகளாவன: மா, கொய்யா, மாதுளை என்பன.

2. வேலன் கொண்டுவந்த பொருள்களாவன: சீப்பு, கண்ணாடி, சோப்பு, மைக்கூடு ஆகியவை.

. இது முற்றுப்புள்ளி; இது புல்ஸ்டாப் என்றும் சொல்லப்படும். இக்குறி வாக்கியங்களின் முடிவில் இடப்படும். இக்குறியிட்ட இடத்தில் நான்கு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

(உ-ம்) 1. கந்தன் வேலை செய்தான்.

2. வண்டியில் குதிரையைப் பூட்டி ஓட்டினான்.

? இது வினாக்குறி; இது இண்டராகேஷன் மார்க் என்றும் கூறப்படும். வினவ வேண்டிய இடங்களில் இது குறிக்கப்படும். இங்கு நான்கு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

(உ-ம்) 1. என்னோடு விளையாட வருகிறாயா?

2. நீ பாடம் படித்தாயா?

! இது உணர்ச்சிக் குறி. இது எக்ஸ்கிளமேஷன் மார்க் என்றும் சொல்லப்படும். மகிழ்ச்சி கோபம், ஆச்சரியம் முதலிய உணர்ச்சிகளைக் குறிக்க வேண்டிய இடங்களில் இக்குறி இடப்படும். இங்கு நான்கு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

(உ-ம்) 1. பயமாயிருக்கிறதே!

என்ன வார்த்தை சொன்னாய் நீ!

எவ்வளவு அழகாய் இருக்கிறது!

## பயிற்சி

பின்வரும் வாக்கியங்களில் உரிய இடங்களில் தக்க நிறுத்தற்குறிகளை இடுக.

1. வேலா நீ கூறுவது சிறிதும் சரியாக இல்லை.
2. அவன் நல்ல பையன் அதனால் அவனை எல்லோரும் விரும்புகிறார்கள்
3. நீ ஏன் அங்கே சென்றாய்
4. உன் அண்ணன் பெயர் என்ன
5. இவ்வரிசையில் உள்ள பொருள்களாவன:— தராசு படிக்கல கத்தி அரிவாள் பலகை என்பனவாம்

## பயிற்சி வினுக்கள்

1. ஒலி எழுத்து என்பது யாது? வரியெழுத்து என்பது யாது?

2. உயிர் எழுத்துக்களுக்கு அப்பெயர் வரக் காரணம் என்ன?

3. உயிர்மெய்யெழுத்துக்கள் எவை? உயிர் மெய் எழுத்து ஆவதற்கு உயிரும் மெய்யும் எப்படிச் சேரவேண்டும்?

4. ரகர றகர பேதம் விளங்குமாறு இரண்டு உதாரணங்கள் தருக.

5. ந, ன இவை எவ்வாறு பிறக்கும்? மொழி களில் இவை எங்கு வரும்?

6. ல, ழ, ள இவற்றின் பிறப்பு இடங்களை முறையே கூறுக. இவை வரும் சொற்கள் பொரு ளில் வேறுபடுவதை விளக்குக.

7. பின்வருவனவற்றிலுள்ள பகுதிகளைத் தனியே எடுத்து எழுதுக.

வலைஞன், சென்ருன், பொன்னன், தொட்டான், தருகிருன், கூனி, மனைவி, தேடினுன், பாடினுள், இருப்பான்.

8. தமிழில் வந்து வழங்கும் வேற்றுமொழிச் சொற்களுக்கு ஐந்து உதாரணங்கள் கூறுக. அவை இன்ன மொழிச் சொற்கள் எனப் புலப்படுத்துக.

9. வரவு சிலவு; யோஜனை செய்தான்; ஜாமான் வாங்கினான்; குருதையேறினான்; கொரங்கைக் கண்டான். மேற்கண்ட சொற்றொடர்களைத் திருத்துக.

10. ஆறுவகைப் பெயர்ச் சொற்களுக்கும் முறையே இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

11. முக்கால வினைமுற்றுக்களுக்கும் முறையே மும்மூன்று உதாரணங்கள் தருக.

12. ஒரு பொருட் பல சொற்கள் பொருளில் நுட்பமாக வேறுபடுவதற்கு இரண்டு உதாரணங்கள் தருக.

13. பின்கண்ட நிலைமொழி வருமொழிகளைப் புணர்த்தி, அவை என்ன வேறுபாடு அடைந்தன எனக் கூறுக.

மரம் + இருந்தது; மரம் + நாய்; முள் + எடு; அ + குதிரை; என்னை + பார்த்தான்; எனக்கு + தந்தான்.

14. முற்றுப்புள்ளி எங்கு இடவேண்டும்? அது உள்ள இடத்தில் எத்தனை மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்?

15. உணர்ச்சிக் குறியிடுதற்குரிய இடங்கள் வருமாறு மூன்று உதாரணங்கள் கொடு.



# செந்தமிழ் இலக்கணம்

## இரண்டாம் படிவம்—சிறப்புப்பகுதி

வித்துவான், V. நரசிம்மன், M. A.

வித்துவான், C. இராமசாமி

தமிழ் ஆசிரியர்-கழக உயர்நிலைப்பள்ளி, வத்தலகுண்டு.



ஜெனரல் புக் கம்பெனி

கும்பகோணம்

 [விலை 0—7—0

# முன்னுரை

செந்தமிழ் இலக்கணம் என்னும் இந்நூல், முதன் மூன்று படிவச் சிறப்புத் தமிழ் பயிலும் மாணவர்க்கு உரியதாக 1951-ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்டுள்ள புதிய பாடத் திட்டத்தை (syllabus) அடிபொற்றி அம்மாணவர்கட்கு நன்கு பயன்படும் வகையில் இயற்றப் பட்டுள்ளது.

உதாரணங்களால் விதியைக் கற்பிப்பதாகிய அநுமான முறை (inductive method) இந்நூலில் கையாளப்படுகின்றது. மாணவர் விருப்பத்தோடு இலக்கணம் கற்க இது ஏதுவாகும். இதில் கொடுக்கப் பட்டுள்ள உதாரணங்கள் எளிமையும் விளக்கமும் உடையவை. ஆங்காங்குப் புதிய முறையில் போதிய பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. இறுதியிலுள்ள தேர்வு வினாக்கள் கற்றவற்றைக் கருத்திற்குக் கொணர்ந்து பயில பயன்படும்.

கல்வித் துறை போகியோர் இதனை ஆதரிப்பார்களென நம்புகின்றோம்.

ஆக்கியோர்கள்.

# பொருளடக்கம்

# இரண்டாம் படிவம் — சிறப்புப் பகுதி





# I. எழுத்து

## 1. குறில், நெடில்

*அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ.* இந்தப் பன்னிரண்டு எழுத்துக்களும் உயிர் எழுத்துக்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள். இவற்றில்,

*அ, இ, உ, எ, ஒ*—இந்த ஐந்து எழுத்துக்களையும் உச்சரித்துப் பாருங்கள். இவை குறுகிய ஓசை உடையனவாய் இருக்கின்றன அல்லவா? ஆதலால் இந்த ஐந்து எழுத்துக்களும் ***குற்றெழுத்துக்கள்*** எனப்படும்.

குற்றெழுத்தாவது, குறுகிய ஓசையை உடைய எழுத்து. குற்றெழுத்து, *குறில்* என்று சொல்லப் படும்.

உயிரெழுத்துக்களில் *ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ*—என்னும் ஏழு எழுத்துக்களையும் உச்சரித்துப் பாருங்கள். அவை நீண்ட ஓசையை உடையனவாய் இருக்கின்றன அல்லவா? ஆதலால் அவை ***நெட்டெழுத்துக்கள்*** எனப்படும்.

நெட்டெழுத்தாவது நீண்ட ஓசையை உடைய எழுத்து. நெட்டெழுத்து, *நெடில்* என்றும் சொல்லப் படும்.

உயிரும் மெய்யும் சேர்ந்த எழுத்து உயிர்மெய் எழுத்து என்பதை அறிவீர்கள். ஆதலால் உயிர் எழுத்துக்களிலுள்ள குறில்கள் மெய்யெழுத்துக் களோடு சேர்ந்து உயிர்மெய்க் குறில்கள் ஆகும். உயிர்க்குறில் 5-ம், 18 மெய்யெழுத்துக்களோடும் சேருவதனால், மொத்தம் $5 \times 18 = 90$ உயிர்மெய்க் குறில்கள் உண்டாகும்.

(உ-ம்) க் + அ = க
ச் + இ = சி
த் + உ = து

உயிர் எழுத்துக்களிலுள்ள 7 நெடில்களும், 18 மெய்யெழுத்துக்களோடும் சேருவதால், மொத்தம் $7 \times 18 = 126$ உயிர்மெய் நெடில்கள் உண்டாகும்.

(உ-ம்) க் + ஆ = கா
ங் + ஈ = ஙீ
ச் + ஊ = சூ

உயிர்மெய்க்குறில் 90-ம், உயிர்மெய் நெடில் 126-ம் சேர்ந்து, மொத்தம் உயிர்மெய் எழுத்துக்கள் 216 சரியாக ஆதலை அறிக.

## 2. மெய்யெழுத்து வகை

### வலி, மெலி, இடை

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்—இந்த எழுத்துக்கள் மெய் எழுத் துக்கள் என்பது உங்களுக்குத் தெரியும். இவற்றுள், க், ச், ட், த், ப், ற்.—இந்த ஆறு எழுத்துக்களையும் உச்சரித்துப் பாருங்கள். இவை வலிய ஓசை உடை

யவை ஆகும். ஆதலால் இவை **வலி** அல்லது **வல்லினம்** எனப்படும்.

மெய்யெழுத்துக்களில் ங், ஞ், ண், ந், ம், ன்— இந்த ஆறு எழுத்துக்களையும் உச்சரித்துப்பாருங்கள். இவை மென்மையான ஓசை உடையவை. ஆதலால் இவை **மெலி** அல்லது **மெல்லினம்** எனப்படும்.

மெய்யெழுத்துக்களில் ய், ர், ல், வ், ழ், ள்–இந்த ஆறு எழுத்துக்களையும் உச்சரித்துப்பாருங்கள். இவை வலிய ஓசை உடையவும் அல்ல; மெல்லிய ஓசை உடையவும் அல்ல; இடைப்பட்ட ஓசை உடையவை. ஆதலால் இவை **இடை** அல்லது **இடையினம்** எனப்படும்.

மேற்கண்டவாறு மெய்யெழுத்துக்கள் மூவகைப் படுதலை அறிக.

வலி அல்லது வல்லினம் 6 எழுத்துக்கள். மெலி அல்லது மெல்லினம் 6 எழுத்துக்கள். இடை அல்லது இடையினம் 6 எழுத்துக்கள். மொத்தம் மெய்யெழுத் துக்கள் $3 \times 6 = 18$ ஆவது காண்க.

உயிர்மெய்யெழுத்தில் மெய்யெழுத்து சேர்ந்து உள்ளது அல்லவா? ஆகையால் அதில் மெய்யெழுத்து வகைகளும் இருக்கும். அவ்வகைகளைப் பொறுத்து உயிர்மெய் எழுத்துக்கள் பின்கண்டவாறு பிரிவுபடும்.

வல்லின மெய் + உயிர் = வல்லின உயிர்மெய் எழுத்து. இவை $6 \times 12 = 72$ ஆவது காண்க.

(உ ம்) க் + அ = க
க் + ஆ = கா

